# காதல் முல்லை

# நலம் வாழ எந்நாளும் வாழ்த்துக்கள்

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -



அன்பினால் இன்புற்று என்னை ஆட்கொண்ட அரிய நட்புறவு
பள்ளி வாழ்வில் நான் கண்ட கலையாத இன்பக் கனவு
நெஞ்சம் மகிழ என்னை மகிழ்வித்த அற்புதப் பாடகன்
ஓர் சகோதரனாய் என்னை அன்பு செய்யும் உத்தமன்



கல்லும், முள்ளும் தாண்டி நாம்
கடந்து வந்த பாதைகள்,
அன்பு ஒன்றே உலகில் அரிய நிதி-இதயம்
அனுபூதியில் அறிந்த பாடமோ சங்கநிதி



தூரம் நட்பிற்குத் தடையல்ல
தொலைவில் வாழ்ந்தாலும் அன்பினால்
இணையும் அரிய நட்பு
இதயம் எழுதிடும் காவிய உறவு

ஊர் வரும்போதெல்லாம் என்னை
வந்து பார்க்கும் உறவு-என்
வார்த்தைக்கு என்றும் மதிப்பளிக்கும்
ஆனந்த தேன் நிலவு

இன்று உன் பிறந்த நாள்
இனிதாய் பல்லாண்டு நீடுழி வாழ
இதயம் நிறைந்து வாழ்த்தும்
உன் இன்ப உறவு




அன்பு, நட்பு கற்றறியப் பாடமல்ல
ஆணவம் கழித்த மனமே இறையில்லம்
தூய மனத்திற்கே சத்திய தரிசனம்
அன்பு மனத்திற்கே நிம்மதி பொய்யல்ல,



தம்பதிகளாய் என்னை அன்பு செய்யும் இன்பம்,
காலத்தால் அழியாத கடவுள் தரும் பேரின்பம்
பல்லாண்டு வளமுடன் வாழ வாழ்த்தும் நட்பு,
அன்பே சிவம் எனப் பூரிக்கும் உறவு.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-26-12-2024

# காதல் கார் காலம்

---




என் கண்களில் கார்கால மழை-நெஞ்சுக்குள்
சோகக் கடலின் ஓயாத அலை
கண் மறைந்த காதல் நிலவு-என் காதல்
வானில் இனி என்றும் அமாவாசையிரவு?



பொன்னால் வடித்துப் பூக்களால்
தொடுத்த பேரழகு, குவளைக்
கண்களால் கதை பேசி, கவிதை பரிமாற
நெஞ்சம் வந்த காதல் தேன் நிலவு

பூவிழிகளில் தாபம், செவ்வாயில் அமுதம்
செங்காந்தள் விரல்களில் அபிநயம்
என் சிந்தையில் காதல் பரதம் ஆடிய மோகனம்
என்னை மறந்திட மனதிலே முகாரியின் ஆலாபனம்

ஈரவிழிகளில் சோகத்தின் ஆர்ப்பரிப்பு, விம்மிடும்
நெஞ்சில் சோகப் பூகம்பத்தின் நிலைப்பு
காதலும் கனவானது, கன்னியின் அன்பும்
கானல் நீரானது, வாழ்வு சூனியமானது



நெஞ்சத்தை மலர் மஞ்சமாக்கி
நேசத்தால் கனிந்து-அஞ்சுகமே
என் காதல் அருஞ்சுகமே எழுதிய கவிதை,
காற்றில் எழுத்தானது, கண்ணீர் முட்டுது



காதல் கானல் நீராக, கண்ட
வண்ணக் கனவு கலைந்து போக
சோலையான நெஞ்சம் பாலையானது-
இதயத்தை சுனாமி நொருக்குது

பூவிழி வாசலில் கண்ணீர்க் கோலம்-பொன்மகள்
நெஞ்சுக்குள் சோகப் புயலின் ஆரவாரம்
பங்கய மேனியில் அந்தியின் வாடை
காதலைத் தீய்த்த சாதியக் கோடை

முள்ளும், மலருமாய்க் காதல்
மனதை நோகடிக்கும் பிரிவால் சாதல்
அங்கயற்கன்னியின் விழிகளில் காயாத ஈரம்
காதல், கனவாய், பழங்கதையாய்ப் போன துயரம்



சாதியம் பேசும் மானுடம் இழிந்த சாதி
சாதியம் கடந்த காதலில் அன்பே உயர் நீதி
சாதியச் சகதியை தாண்டிய மங்கை
அன்பே நீதி எனக் காதலைத் தேடிய கங்கை

இரு மனம் ஒத்த திருமணத்தில்
அன்பின் ஓயாத நறுமணம்
சாதியம் கடந்து யாத்த யாகம் அன்பின் புரட்சி
சாதியச் சகதியில் மூழ்கிக் கிடப்பதோ வீழ்ச்சி

குவளை விழிகளில் காதல் பூத்தாட
கொஞ்சும் இதழ்களில் தேன் சுனை பாய
மலர்க்கண் வெளுப்பை இதழ் ஏந்த, வாயின் சிவப்பை
விழி ஏந்த, யாத்த இன்பம் பேரின்பமானது



கார் குழலோ கொட்டும் அருவி
கனியிதழ்களோ அமுத ஊறுணி-
நூலிடை பற்றி நுதல் முத்தம் கொடுத்து
யாத்த காதல் வேள்வி-இன்பத்துப் பாலானது

கன்னி மனம் கூத்தாட, சங்குக் கழுத்தில்
பூச்சரங்கள் பூத்தாட, நூலிடையில் நூதனம்
பூ மேனியிலே பரிமளம், அணைக்க அணைக்க
அணையாத காதல் தீ, இன்ப வேள்வியானது

பொன்மேனி தழுவி, இதழமுதம் பருகி
இதழ்களால் இதழ் அளந்த இன்பம்
முடி தொட்டு அடி வரை பேரின்பம்
இல்லறமோ நல்லறமான யாகம்



மை எழுதிய சேல் விழிகள் மையல் சொல்ல
நெய் தடவிய கூந்தலில் பரிமளம் நாற, சொல்
செப்பும் செவ்வாய் என்னை சூடிக்கொள் என
சுந்தரியை சூடிக்களித்த இன்பம்தான் என்னே!

வில்லோ புருவம் என்றது, கயலோ விழிகள் என்றது
இதழோ அமுதம் என்றது- பூ மேனியோ மலர்மஞ்சம் என்றது
யாழ் என்னை மீட்டு கன்னி சொன்னது,காதலாகி
என்னை வீழ்த்தியது காமன் கணையானது

பொங்கிய மேனி களிப்பிலே சிவக்க, மங்கலக்
குங்குமம் மார்பிலோ நிலைக்க-மதுமலர்க் கூந்தல்
உதிர்த்த மலர்களோ மஞ்சத்தில் சிரிக்க
காதலர் சுகிர்த்த இன்பமோ தேன் நிலவானது

அடி முடி காணாத மோகன மலராய் இவள்,
காமனின் மகளா இவள், கம்பனின் மைதிலியா இவள்
வியந்து கவிதை புனைந்த நெஞ்சத்தில் இன்பமயக்கம்
காதலர் நெஞ்சத்தில் தெவிட்டாத பேரின்பம்



கத்தும் காமம் கடலாய்ப் பொங்க-சுவைத்த
கரைகாணாத இன்பம் காமத்துப்பாலானது
இரு மனம் யாத்த இன்பவேள்வியில்
பஞ்சணைச் சுகம் மோட்ச இன்பமானது
பரமபதமோ நெஞ்சைத் தொட்டது

ஊடும், பாவுமாய் இணைந்திட இழைத்த காதல்
பேரின்பமானது, இரு மனம் ஒருமனமாக
ஈருடல் ஓருடலாக, அர்த்தநாரிஸ்வரத் தத்துவம்
இனிய இன்பத்துப் பாலானது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-18-12-2024

# காதல் முல்லை

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -

விழிகளுக்கு வண்ண மலராய்
செவிகளுக்கு கானக்குயிலாய்
சுவாசத்திற்கு மல்லிகையாய் மணந்து
என் நெஞ்சில் படர்ந்த காதல் முல்லை





பூரித்த மார்பில் செங்கலசங்கள்
பொன் மேனியிலோ நாணக்கோலங்கள்
ஒளி சிந்தும் புன்னகையில் முத்துக்கள்
காதலால் என்னை ஒளிர்வித்த கன்னியால்
நெஞ்சில் ஓயாத தித்திப்புக்கள்

இதயத்தை ஈர்த்திடும் அழகோ காந்தப் புலமாகும்
பார்வைகள் தழுவிடப் பூக்கும் பரவசங்கள் தேனாகும்
மொழியிழந்து ஊமையாக, விழிகள் பேசும்
காதல் மொழிகள் கவிதையாகும் -கடந்து
செல்லும் நாட்கள் காதலர் தினங்களாகும்



நாணம் பூத்த மேனியில் நவரசங்கள்,
கானமும், நாதமுமாய் இணைந்தட
காதலின் சப்தசுரங்கள் இசைக் கச்சேரியாகும்
இரு மனம் இணைந்த வாழ்வு தேன் நிலவாகும்

தேன் மலரடி நீ என் விழிகளுக்கு
தெவிட்டாத உன் கனிவாயிதல் முத்தங்கள்
தித்திக்கும் திராட்சை மதுவடி,
என் சுவாசம் மயங்கிடும் நறுமணம் நீயடி
ஏவாளே என் இன்பவனமே-ஆதாம்
எனக்கு கடவுள் தந்த காதலின் பதுமநிதியடி

காதல் முல்லையே உன்னைக் கண்டு
கடையாணி உடைந்த தேராய் என் இதயமடி
பரவிப் படரடி, காதலை கண் மலர்ந்து சொல்லடி
என் இதயம் உனதடி, நம் காதல் காவியமடி

அழகே உன்னைக் கண்டு பாலும் கசந்ததடி,
பஞ்சணையும் நோகுதடி, வெட்கம் மறந்தேனடி,
தூக்கம் தொலைந்ததடி

விரகதாபம் சுரமாய் வாட்டுதடி
கனவிலும் நீயடி, நினைவிலும் நீயடி
வாட்டும் காதல் சுரத்திற்கு மருந்தும் நீயடி





துடிக்கும் இதயம் உன்னைத் தழுவத் துடிக்குதடி
கார்குழல் சூட மலராவேன்,கண்கள் பூசிட மையாவேன்-
பொன்னுடல் சூடிட வண்ணக் கலிங்கமாவேன்
காமனை வெல்லத் துணையாவேன், காதலால்
என்னை ஆட்கொள்ளடி தேவி எனத் தவமிருப்பேன்

செவ்வாய் திறந்து ஒரு மொழி செப்படி
சேல்விழி அசைய காதல் மழை பொழியடி
நாணம் பூத்து நறுமண மேனி சிவக்க-கான மழையில்
நீ நனைய நான் பாடும் காதல் கீதமடி

பூச்சூடும் உன் அழகை நான் சூட
நாளும் புதுக்கவிதை உனக்காய் நான் எழுத
உன் விழி சொல்லும் மொழிகள் கவிதையானது
உன் இதழ் சிந்தும் முத்தம் தேனானது

நெஞ்சமெல்லாம் நீயாகி, நினைவெல்லாம் உனதாகி
காதல் அஞ்சுகமே-என் அருஞ்சுகமே
தவமாய்த் தவமிருக்கின்றேன்
காதல் வரம் தருவாயா?





உன் பார்வை பட்டு மலரும் பங்கயமானேன்
உன் நறுமணம் சுவாசித்து நாளும் உயிர் வாழ்வேன்
பரிமளமாய் உன்னைப் பூசி, பவளவாயில் அமுதருந்தி
இருமனம் இணைந்த திருமணத்தில் நம் வாழ்வு
சொர்கமடி என் சுந்தரி, என் சுதந்திரம் நீயடி

மானென்பேன், என் இதயத்தில் ஆடும்
காதல் மயிலென்பேன்,
நான் சூடும் வண்ண மலரென்பேன்,
என் காதல் வானத்து வண்ண மதி என்பேன்
காமன் கணைபட்ட நெஞ்சுக்கு-
காதல் மருந்தென்பேன், தேன்னென்பபேன்,
திகட்டாத அழகென்பேன்-என்னை
ஆட்கொண்ட தேவி நீ என்பேன்
உன் பக்தன் நான் என்பேன்

பூவிழி அழகைப் பாடி மகிழ்ந்திருப்பேன்
பொன்மேனி தழுவி பெண் இன்பம் அறிந்து
கண்மணி உன்னைக் காதலால் பூஜை செய்தே
காதலர் நாம் என்பேன்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-28-12-2024*

# காதல் நிலவே

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -



என் விழிகளில் கார் காலம்
என் மொழிகளில் முகாரி ராகம்
கண் மறைந்த என் காதல் தேன் நிலவு.
என் வாழ்வோ நாளும் அமாவாசை இரவு

ஒற்றைக் குயிலாய் கரையும் மனதில்
சோகச் சுனாமியின் கொந்தளிப்பு
காட்டுத் தீயாய் சோகம் எரிக்கும் நெஞ்சுக்கள்
குருவிக் குஞ்சாய் இதயத்தின் பரிதவிப்பு



கண் மறைந்த என்தன் காதல் தேவதை-
இடிந்து வீழ்ந்த என்தன் வசந்த மாளிகை
விடியல் காணாமல் நீளும் இரவு இதயத்தை வாட்ட
நீராடும் விழிகளில் சோகத்தின் வரவு



நிலவிழந்தது என் பொன் வானம்
அழகிழந்து இருளில் மூழ்கும் என்தன் ஆனந்தம்
பூபாளம் ஒலித்த இதயக் கோயிலில்
நித்தம் கண்ணீரில் நீராடும் காதல் மனம்

பூபாளம் பாடிய புள்ளிக்குயில் மறைந்திட
ஒற்றைக் குயிலாய் என்தன் எழில்,
கார்கால மழை என் விழிகளில் குடிகொள்ள
காணாமற்போன என்தன் வண்ணமயில்

மலர் முகமோ மோகனம், கயல் விழிகளில் ஹிந்தோளம்
பொன்மேனியிலோ நறுமணம், கனிமொழிகளிலோ பூபாளம்
என்னை ஆட்கொண்ட காதலில் கோதை
என்னைத் தவிக்க விட்டு பாவத்தில் சீதை

பொட்டாய் என்னைப் பிறை நுதலில் எழுதி,
மலராய்க் கார் குழலில் சூடி
மையாய் சேல் விழிகளில் பூசி, என் நெஞ்சில்
வண்ண ஓவியமாய்த் தன்னை எழுதிய கோதை,
கண்மறைய வாழ்வோ இருண்ட பாலை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-1-1-2025

# கோலமயில்

---

வில்லானது புருவமடி, வேலானது விழிகளடி
அமுதானது செவ்வாய் மொழிகளடி-அழகே
உன்னைக் கண்டு கணைபட்ட மானாய்
காதலில் விழுந்தது என் இதயமடி




மையெழுதிய விழிகளில் மையல் துளிர்க்க
நெய் தடவிய கூந்தலில் மலர்கள் சிரிக்க
திங்கள் முகமும், செவ்வாய் இதழ்களும்
என் இதயத்தை கொள்ளையிட்டதென்ன?



மதிமுகம் தொட்டு மலரடிவரை சுடர்விடும் அழகு,
மனதை மயக்க, தேய்பிறை காணாத வளர்மதி
திகட்டாத அழகில் கன்னியோ முழுமதி
என் காதல் வானில் நாளும் பௌர்ணமி

மலர் முகம், மதி நுதல், செவ்விதழ், கயல் விழி
கொடி இடை, அன்ன நடை, கோலமயிலின் சாயல்
முத்துப் புன்னகையில் நாணச் சிரிப்பு
பஞ்சவாணக் கிளியோ நெஞ்சில் குடியிருப்பு



சேல்விழிகளில் மை நிலைக்க, செவ்வாய் மொழியில்
தேன் இனிக்க, பொன்மேனியில் அழகு சிரிக்க
கார் குழலில் மலர் மணக்க,காதல் நிலவான மங்கை-
என் நெஞ்சில் பாய்ந்த காதல் கங்கை

கண் மறைந்தாலும் நெஞ்சில் உலவும்
காதல் தேன் நிலவு,பொன்னோடு பூ நிலைக்க
மண்ணோடு கலந்த மழையாய்
இதயம் கலந்த இன்ப உறவு

பூங்கொடியில் பொன் வசந்தம்
பூ மேனியிலே மல்லிகையின் சுகந்தம்
கனியிதழ்களில் அமுதம்-கன்னியோ குமுதம்
காதலர் வாழ்வில் குன்றாத தேன் வசந்தம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-18-12-2024

# கொய்யாக் கனி





பூவே பூக்கொய்ய-பூவையழகை
மனம் கொய்ய, காதல் கிளி
கொத்தாத கொய்யாக் கனி என் நெஞ்சை
கண்களால் கொத்திய காதல் கிளி

பூத்தாடும் அழகு கண்டு மனம் ஆனந்தக் கூத்தாட,
கயல் விழிகளில் மோகனம், கனிவாய் இதழ்களில்
அமுதம், முத்துப் புன்னகையில் காவியம்,
கண்படும் அழகால் நெஞ்சிலே காதலின் நர்த்தனம்

பொட்டு வைத்த வண்ண நிலவு, என் நெஞ்சில்
காதல் கோலமிட்ட முத்துப் புன்னகையோ பேரழகு ,
பட்டு வண்ண ரோஜா மேனி- முத்தமிட
பவள வாயில் தித்திக்கும் அமுத பாணி

தித்திக்கும் இதழ் கள் தேனோ, திராட்சை மதுவோ?,
எத்திக்கும் நோக்கும் கண்கள் கயலோ, வேலோ?
முக்திக்கு இட்டுச் செல்லும் காதலும் பக்தி
பக்தியோடு தொழுதிட கிட்டிய கன்னியோ குபேரநிதி



கண்படும் அழகைக் கண்டு நெஞ்சம் கவி பாட,
காமன் கணைபட்டு புண்பட்ட நெஞ்சுக்கு
முத்துப் புன்னகை மருந்தாக, காதலான மனம்
கலாபமயிலாய் ஆடிடப் பிறந்த காதலர் தினம்




இரு மனம் இசைந்து இசைபாட
இதயச் சங்கமத்தில் மனமழிந்து
இருப்பது நான் அல்ல நீயே மெய்யாக
அன்பின் உன்னத உறவாய்க் காதல்

மலர் சூடும் அழகை மனம் சூடி மகிழ
யாழும், குழலும் இசைக்கும் மோகனத்தை
மனம் இசைக்க, கார் கண்ட மயிலாய் ஆடி
மழை கண்ட பயிராய் பூத்த காளை மனம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-19-12-2024

# ஒரு பிடிச் சோறு



குண்டு மழையில் ஓடித்தப்பி உயிர் பிழைத்து,
வாழிடமிழந்து அகதியாகி, உறவு
இழந்து அநாதையான விழிகளில் காயாத ஈரம்
பசி வயிற்றை வாட்டிட கையேந்தும் அவலம்

பொங்கும் கடல் ஒரு புறம்
பலத்த இராணுவ காவல் அரணோ மறுபுறம்
வாழ்வோ திறந்தவெளி சிறைக்கூடம்
வானை வெறித்த விழிகளில் சூனியம்



ஒரு புறம் நீர்ப்பரப்பு, நாற்புறமும் இடிபாடான குடியிருப்பு,
வானிலே உயிரையும், உடைமைகளையும் எரிக்கும்
தீப்பிழம்பு, உயிரிழந்த சொந்தங்களோ மண்ணிற்கு உரமாக
மனதிலே சலிப்பு, இறைவனோ விண்ணில் நிலைப்பு



பசியும், நோயும் அச்சுறுத்த
பரிதாப மரணங்கள், பல நூறு
குழந்தைகள் கையேந்த-காஸாவில்
உணவுத் தட்டுப்பாடுகள்

கண்ணீர் காயாத விழிகளில் கலைந்த கனவாய்
உறவு, காரிருள் சூழ நிலா வெளிசத்தில் கூடார வாழ்வு,
பசி தீர்க்க உணவில்லை, பாதுகாக்க யாருமில்லை,
ஐவேளை தொழுதும் இறைவனும் துணையில்லை





விரட்டித் துரத்தும் மரணம்
விதியை நொந்திடும் அகால மரணம்
பாலஸ்தீனராய் பிறந்தது குற்றமா?
வாழ நாடு கேட்டது சாவான பாவமா?

அடிமைச் சிறையில் மண்ணிருக்க.
அகதியான மக்கள் உணவுக்கும், மருந்துக்கும்
ஏங்கித் தவிக்க, பசி தீய்க்கும் வயிறு
குண்டுகள் தீ மூட்டிட எரியும் உறவு

குழந்தைகளை என்னிடம் வரவிடுங்கள்
இறையரசு இத்தகையோரதே, சின்னஞ்சிறியவருக்கு
இடைஞ்சலாயிருப்பவன் கழுத்தில்
எந்திரக் கல்லை கட்டி கடலில் எறிவது நலமே
பெருமான் இயேசுவின் முழக்கம்





தனி ஒருவனுக்கு உணவில்லை எனில்
ஜகத்தினை அழித்திடுவோம்-பாரதியின் கர்ச்சனை
பல நூறு குழந்தைகள் பசியால் கதறியழ
அல் ஜாஸிராவில் காணொளிக் காட்சிகள்

நான் பசியாய் இருந்தேன் உண்ணத் தந்தீர்
தாமாய் இருந்தேன் குடிக்கத் தந்தீர்
ஆடையின்றி இருந்தேன் ஆடை தந்தீர்
அந்நியனாய் இருந்தேன் ஏற்றுக் கொண்டீர்
நோயுற்று இருந்தேன் பாராமரித்தீர்
சிறையில் இருந்தேன் பார்க்க வந்தீர்

உலகில் கிறிஸ்துவாய் ஒருவரும் இல்லை?
அழுகையும், தொழுகையும் ஒன்றான அவலநிலை
இருந்தவரையும் அறைந்த கொன்ற மதவாதம்
வருபவருக்கும் சிலுவை செய்யும் இனவாதம்



காஸாவில் துன்புறும் குழந்தை இயேசு
உலகெங்கும் வெற்றுக் கொண்டாட்டமாய்
நத்தார் பிறப்பு, மதமோ சாரமற்ற உப்பு
மனிதா நீ ஈஸ்வரரூபம் அறிந்தால் உயிர்ப்பு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-22-12-2024*

# சிரியா

---



விழிகளில் ஈரம், ஆற்றாமையால் குமுறி
விம்மும் நெஞ்சிலே தீராத சோகம்
காணாமற்போன பந்தம்-கண் காணாத
குழிகளுக்குள் புதைந்த சொந்தமோ பல்லாயிரம்



ஆறாத்துயரைச் சொல்ல மொழிகளில்லை,
அழுது புலம்பியும் ஆறுதல் கிட்டவில்லை
மனக்காயத்திற்கு மருந்தில்லை-பஷீர் அல்
அசாத்தின் அராஜகத்திற்கு முடிவில்லை

குண்டு வீச்சில் உதிரும் குடியிருப்பு
வாழிடமிழந்த அகதிகளோ கூடாரங்களில்
நிலைப்பு, சர்வாதிகாரியின் ஆட்சியில்
நாளும் பல நூறு உயிரிழப்பு

வதை, வாதை, சிறை, கொலை நீதியானது,
ஐவேளைத் தொழுகை மாறாத விதியானது
பகைமை பாதையானது, அரக்கனுக்கு
அப்பாவிகளின் குருதி மஞ்சன நீரானது



அராஜகத்தின் வீழ்ச்சியை ஆடிப்பாடிக்
கொண்டாடும் மக்கள், சிறைக் கதவுகள்
திறந்திட சிறகடித்துப் பறக்கும் பல்லாண்டுச்
சிறைவாசம் அனுபவித்த புள்ளினங்கள்

உதரத்தில் பிறந்த உறவும்
உள்ளத்தால் கலந்த காதலும்
எண்ணத்தால் கலந்த நட்பும் அழிய
அராஜகத்தை கட்டவிழ்த்த அசாத்



அரக்கனும் புகலிடம் கோரித் தப்பியோட,
ஆயுதப் புரட்சியின் வெற்றி, அச்சத்தில்
வாழ்ந்த மக்கள், நம்பிக்கையின் புத்தொளி காண
அன்புக் கரம் நீட்டும் அயல்நாடுகள்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-18-12-2024*